# பகவத் பாதை

## BAGAVATH PATHAI

தமிழ் மாத இதழ்

மலர் 5 | இதழ் 9 | நவம்பர் 10, 2018 | வருடச்சந்தா ரூ 100/- Volume : 5 | Issue 9 | November 10th, 2018 | Annual Subscription Rs. 100/-



ஞானத்தின் பிரம்மாண்டம்

# பகவத் பாதை தமிழ் மாத இதழ்

"ஆனந்தப் பரவச நிலைதான் ஞானம், முக்தி என்று ஆன்மிக பெரியவர்கள் பலரும் தவறாக விவரித்து விட்டார்கள். நமக்கு ஏற்படும் அனுபவங்களை புறக்கணித்துவிட்டு நாம் சந்திக்கும் பிரச்சினைகள் அனைத்தையும் நேருக்கு நேராக எதிர்கொள்வதுதான் சரியானதாகும். மன அனுபவங்களை புறக்கணித்த நிலையில்தான் மனம் சுதந்திரமாக இயங்கும். இதை புரிந்து கொள்வதே ஞானம். இது சராசரி மனிதராலும் புரிந்து கொள்ளும் தன்மையில் தான் உள்ளது. அனைவருக்கும் பயன்படும் சாதாரண, சராசரியான தன்மையில் இருப்பதுதான் ஞானத்தின் உண்மையான பிரம்மாண்டம்.

– ஸ்ரீ பகவத்

## ஞான உறுதி முகாம்

ஸ்ரீ பகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்களுக்கு வணக்கம்.

**ஞானப்புரிதலை புரிந்து கொள்வது எவ்வளவு முக்கியமோ அதை விட பல மடங்கு முக்கியமானது புரிந்து கொள்ள வேண்டியவற்றை புரிந்து கொண்டோம் என்று உறுதி செய்துகொள்வது.**

ஐயா வழங்கும் ஞானப் புரிதல் நமக்குள் வெறும் கருத்தாக மட்டும் பதிவதால் பயன் ஏதும் இல்லை. அந்தப் புரிதல் நம்மால் கண்டுபிடிக்கப்பட்ட உண்மையாக மாற வேண்டும். அப்போதுதான் அது நமக்கு விடுதலையைக் கொடுக்கும்.

இதற்காக சிறப்பு ஞான உறுதி முகாம் (Enlightenment Confirmation Camp) நடைபெற உள்ளது.

இடம் : **ஸ்ரீ பகவத் பவன்,** ஐருகு மலை அடிவாரம், கொடம்பக்காடு, பெரியகவுண்டாபுரம், சேலம்-636 106.

நாள் : **30.12.2018 மாலை 5.00 மணிமுதல் 1.1.2019 மதியம் 3.00 மணிவரை**

செலவுப் பகிர்வு **ரூ. 3000/-** நபர் ஒருவருக்கு

## உள்ளே



கூடுதல் தகவல்களைப் பெற விரும்புகிறீர்களா? (அ) பாதையை நண்பர்களுக்கு அனுப்ப விரும்புகிறீர்களா?




Sri Bagavath Mission


31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu India

V.A.P. SHARAVANAN - 99942 05880
Dr. N. KAILASAM - 94432 90559
K.S. JEEVAMANI - 97891 65555

www.sribagavathmission.org
www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com



This book Designed by
SRI ESPARI GRAPHICS, Salem-3.
Cell : 90926 46260, 98651 34075


**இந்த சிறப்பு ஞான உறுதி முகாமில் கலந்து கொள்வதற்கான தகுதிகள் :**

1. ஸ்ரீ பகவத் ஐயாவின் ஞான முகாம்களில் குறைந்தபட்சம் 2ல் கலந்திருக்க வேண்டும்.
2. **ஞான வாழ்வின் நடைமுறை யதார்த்தங்கள்** என்ற நூலினை படித்திருக்க வேண்டும்.

**மேற்கண்ட நிபந்தனைக்கான காரணம் :**

முதல் முறையாக ஞானமுகாமில் பங்குபெறுவர்களிடமும் பகிர்ந்துகொள்ள முடியாத பல விசயங்களையும் நடைமுறை யதார்த்த உண்மைகளையும் இந்த சிறப்பு ஞான முகாமில் பகிர்ந்து கொள்ளப் போகிறோம். இவை மேற்குறிப்பிட்ட தகுதியானவர்களுக்கு ஞானத்தை உறுதி படுத்துவதற்கும், தேடுதலை நிறைவு செய்து விடுதலை பெறுவதற்கும் பேருதவியாக இருக்கும். ஆனால் புதிய அன்பர்களுக்கு குழப்பத்தை ஏற்படுத்திவிடும் என்பதால் தவிர்க்கிறோம். அதனால் இந்நிகழ்ச்சியை **Youtube** லும் வெளியிட மாட்டோம் என்பதை தெரிவித்துக்கொள்கிறோம்.

30 அன்பர்கள் மட்டுமே கலந்து கொள்ள முடியும். முன்பதிவு அவசியம்.

**முன்பதிவு செய்யும் வழிகள்**

**M.O, D.D. (or) Cheque :** வரைவோலை அனுப்புபவர்கள் **A/c Sri Bagavath Mission** என்ற பெயரில் சேலத்தில் செல்லத்தக்கதாக அனுப்புமாறு கேட்டுக்கொள்கிறோம்.

**Direct Payment :** நேரடியாக வங்கியில் செலுத்துபவர்கள் கீழ்க்கண்ட வங்கிக் கணக்கில் செலுத்தலாம்.

**HDFC Bank Sri Bagavath Mission A/c No. 15907620000075,
NEFT IFSC : HDFC 0001590 Car Street Branch, Salem**


**ஸ்ரீ பகவத் மிஷன்**
31, இராமலிங்கசாமி தெரு, அம்மாப்பேட்டை, சேலம்-3.
கைப்பேசி : 9994205880, 97891 65555

# ஞானத்தின் பிரம்மாண்டம்



- ஸ்ரீ பகவத்

"ஆன்மிகத்தைப் பொறுத்த அளவில், காலங்காலமாக இருந்த அணுகுமுறையை நீங்கள் மாற்றிப் புதிய அணுகுமுறையை அறிமுகப்படுத்தியுள்ளீர்கள். இதனால் லட்சக்கணக்கானோர் பயனடைந்துள்ளார்கள். ஆயிரக்கணக்கானோர் ஞானம் பெற்றுள்ளார்கள்."

"இதைப்பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்? ஜே. கிருஷ்ணமூர்த்தி, இரமணர், புத்தர், இராமகிருஷ்ண பரமஹம்சர் ஆகியோரது உபதேசங்களைக் காட்டிலும் உங்களது அணுகுமுறைதான் உயர்ந்தது என்று கருதுகிறீர்களா?"

- இப்படி அன்பர் ஒருவர் சமீபத்தில் கேள்வியொன்றை எழுப்பினார்.

அவர் கேள்வியின் நோக்கம் என்ன என்பது எனக்குத் தெரியவில்லை. இருந்தாலும் பின்வருமாறு அவருக்குப் பதில் கொடுத்தேன்.

நமது அணுகுமுறை நிச்சயம் அவர்களது அணுகுமுறையிலிருந்து வேறுபட்டதுதான். இங்கு நம்பிக்கைகள் எவையும் கிடையாது. அறிவியல் ரீதியான இந்த அணுகுமுறையால் எவர் வேண்டுமானாலும் பயன் பெற முடியும். அதனால்தான் பலரும் பயனடைந்துள்ளனர்.

அவர் கூறிய அந்தப் பெரியவர்கள் நிச்சயம் உயர்ந்தவர்களே. அதில் எந்தச் சந்தேகமும் இல்லை. அவர்கள் ஞானிகள்தாம் என்பதிலும் எந்தச் சந்தேகமும் கிடையாது. அவர்கள் ஓரளவுக்கு பலருடைய உயர்வுக்கும் உதவியிருக்கிறார்கள். ஆனால் அவர்களால் ஞானம் அடைந்தவர்கள் வெகு சொற்பமே.

உபதேசம் மற்றும் விளக்கம் என்ற பெயரில் பார்க்கும்போது அவர்களது அணுகுமுறையை விட நமது அணுகுமுறை பல மடங்கு உயர்வானது என்பது நடைமுறை உண்மை.

நமது கண்டுபிடிப்பு மற்றும் நமது அணுகுமுறை அவர்களுடையதை விடவும் உயர்ந்ததாக இருக்கும் காரணத்தினால், நான் அவர்களை விட உயர்ந்தவனா?

அவர்கள் அனைவரும் இளம் வயதிலேயே ஞானம் பெற்று விட்டார்கள்.

ஆனால் எனக்கு அப்படி நிகழவில்லை. 40 வருடத் தேடலுக்குப் பின் எனது 58வது வயதில்தான் அது எனக்கு ஏற்பட்டுள்ளது.

ஒரு சராசரி மனிதனாக இருந்துதான் நான் அந்த நிலையை எட்டியுள்ளேன்.

நான் பட்டப்படிப்பு படித்துக் கொண்டிருக்கும் போது கடைசி வருடத் தேர்வுகள் அனைத்தையும் முடித்துவிட்ட நிலையில் கல்லூரி முதல்வரைச் சந்திக்க நேர்ந்தது.

எனது தேர்வை நான் எப்படி எழுதியுள்ளேன் என்பதை விசாரித்தார்.

நன்றாக எழுதியிருப்பதாகக் கூறினேன்.

முதல் வகுப்பில் தேர்ச்சி அடைவேனா எனக் கேட்டார்.

"அந்த அளவுக்கு மதிப்பெண் கிடைக்கும் என்று தோன்றவில்லை. எனக்கு எப்போதுமே இரண்டாம் வகுப்பு அளவில்தான் மதிப்பெண் கிடைக்கும். மூன்றாம் வகுப்பு அளவுக்குப் போக மாட்டேன். அதனால் வழக்கம்போல் இரண்டாம் வகுப்பில் தேர்ச்சி பெறுவேன்," என்று அவருக்குப் பதில் கொடுத்தேன்.

எனது வெற்றிகள் அனைத்துக்கும் பின்னால் ஒரு சராசரி மனித உழைப்புதான் உள்ளது.

"இதோ பிடித்துக்கொள்" என்று எவரோ எனக்கு இதனைக் கொடுத்திடவில்லை.

நாற்பது வருடங்களாக அலைந்து, முட்டி மோதி, காயங்கள் பலவற்றை அடைந்த நிலையில்தான் இது எனக்கு ஏற்பட்டுள்ளது.

அந்த ஞானிகளை விட நான் எந்த விதத்திலும் உயர்ந்தவனல்ல.

இன்னும் நான் என்னை ஒரு சராசரி மனிதனாகத்தான் கருதி வருகிறேன்.

அந்த ஞானிகளை விடப் பல மடங்கு உயர்ந்தவனாக நான் என்னைக் கருதவில்லை.

ஆன்மிக உலகில் ஞானம் மற்றும் ஞானி என உயர்வாகப் பேசப்பட்டாலும் ஞானம் என்பது முடிவான

நிலையல்ல.

முக்தி அல்லது விடுதலைதான் ஆன்மிகத்தின் உயர்ந்த நிலையாகக் கருதப்படுகிறது. அதுதான் உண்மையும் கூட.

மேலே குறிப்பிட்ட ஞானிகள் அனைவரும் அந்த உயர்நிலையான முக்தியை அடைந்தவர்கள்தாம்.

அதில் எந்த ஐயமும் இல்லை.

ஆனால் அவர்கள் எவருமே ஞானத்தின் வாயிலாக அந்த நிலையை எட்டியிருக்கவில்லை.

ஆகவே அவர்களை, ஆன்மிகத்தின் உயர்நிலை அடைந்த முக்தர்கள் என்று கூறலாமே தவிர, ஞானிகள் என்ற பெயர் அவர்களுக்குப் பொருத்தமானது அன்று.

ஞானமே அடையாத ஒருவர் ஞானத்தைப் பற்றி பேசினால் என்ன ஆகும்?

அது குழப்பத்தைதான் ஏற்படுத்தும்.

இதனால் நமது உயர்வுகளுக்கெல்லாம் காரணமான அந்த ஞானிகள் நமது முன்னேற்றத்துக்கும் ஒரு வகையில் தடையாகி விடுகின்றனர்.

நம்மை ஏற்றிக் கொண்டு வந்த பஸ், பஸ் ஸ்டாண்டோடு நின்று விடும். அதற்குப் பிறகும் அதனை நம்பிக் கொண்டிருந்தால் நாம் பஸ் ஸ்டாண்டிலேயே தங்க நேர்ந்துவிடும்.

நாம் நமது வீட்டுக்குப் போக வேண்டாமா?

ரமணரைப் பொருத்த அளவில் அவர் மரண பயத்தை எதிர்கொண்டார். மரணம் ஏற்பட்டது போல் அபிநயம் செய்தார். அதற்குப் பிறகும், தான் உயிருடன் இருப்பதாக அறிந்தார். தனக்கு அழிவில்லை என உணர்ந்ததாகக் கூறுகிறார்.

பயம் என்னும் மனோ அனுபவத்தைப் புறக்கணிக்கக் கற்றுக் கொண்டதுதான் அவரது உண்மையான ஞானம்.

ஆனால் மரணத்துக்குப் பின்னும் தான் நீடித்திருப்பதாகப் புரிந்து கொண்டதாகக் கூறுகிறார். அழிவற்ற ஒன்றாகத் தன்னைக் கண்டுபிடிப்பதுதான் ஞானம் என்ற அடிப்படையில் பேசுகிறார். அது அவரது கற்பனையே தவிர உண்மையன்று.

நமது சாஸ்திரங்களை எடுத்துக் கொண்டாலும்,

நாம் அழிவற்ற மற்றும் பாதிப்புகளற்ற ஆன்மா என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்று கூறி விடுகிறது.

இதனால் அனைவருமே அழிவற்ற ஒன்றைக் கண்டுபிடிப்பதிலேயே தங்களுடைய வாழ்நாட்களையெல்லாம் செலவழித்து விடுகிறார்கள்.

கடைசியில் தேடுதலுடனேயே அவர்களது காலமும் முடிந்து விடுகிறது.

உண்மையில் அனுபவங்கள் அனைத்தையும் புறக்கணிக்க கற்றுக் கொள்வதுதான் உண்மையான ஞானம்.

சாஸ்திரங்கள் உடல், மனது ஆகியவற்றையும் அவற்றின் அனுபவங்களையும் அநித்திய வஸ்து என்று கூறுகின்றன. ஆனாலும் அவற்றைப் புறக்கணிப்பதைப் பிரதானப்படுத்தவில்லை.

அநித்தியத்தைக் கடந்த நித்தியமான ஆன்மாவை அறிய வேண்டுமென்றும், அது ஆனந்த வடிவானது என்றும் கூறி விடுகின்றனர்.

விளைவு?

ஏதோ ஒரு வினோதமான அனுபவத்தைத் தேடிக் காலங்காலமாக ஓட வைத்து விடுகின்றனர்.

அனுபவங்கள் அனைத்தும், உடல் மற்றும் மனதை மட்டுமே சார்ந்தவை என்பதை எவருமே கூறாமல் விட்டுவிட்டனர்.

இதனால் தேடுதலில் இறங்கிய அனைவரும் பேரானந்தப் பெருவெளி என்று ஏதோ ஒரு கற்பனைக் கோட்டையைக் கட்டி வைத்து அதற்குள்ளேயே தங்களைத் தாழிட்டுக் கொண்டு விடுகின்றனர்.

ஆன்ம சாதகர்களின் ஆரம்ப காலத்திற்கு இத்தகைய அணுகுமுறை தவறில்லை. தவறான கற்பனையாக இருந்தாலுங்கூட, ஆரம்ப காலத்தில் அவர்களை அடுத்த கட்டத்துக்கே இது அழைத்துச் செல்கிறது.

அதன் பிறகு அதுவே தடையாகவும் மாறி விடுகிறது.

என்னைப் பொருத்த அளவில் என்ன நிகழ்ந்தது?

ஆனந்தப் பரவச நிலைதான் ஞானம் மற்றும் முக்தி என எண்ணி வந்தேன்.

அது வருவதும் போவதுமாக இருந்தது.

அந்தப் பரவச நிலை நிரந்தரமாக நம்மிடம் தங்கி விட்டால் அதுதான் நாம் அடைய வேண்டிய உயர்ந்த நிலை என்று கருதினேன்.

ஆன்மிகப் பெரியவர்கள் பலரும் அந்த நிலையைத்தான் பெரிதுபடுத்திக் கூறியிருந்தார்கள்.

மயிர்க்கால்கள் தோறும் அமிர்தம் பொங்கி ஆனந்தப் பரவசத்தைக் கொடுக்கும் உயர்ந்த நிலையென்று அதனை விவரித்திருந்தார்கள்.

அமிர்தம் பொங்கும் அந்த ஆனந்தப் பரவசநிலை எனக்கு வந்து வந்து போய்க் கொண்டிருந்தது.

வந்து வந்து போய்க் கொண்டிருந்த அந்தப் பரவசநிலை

ஒரு காலக்கட்டத்தில் முழுமையாக என்னை ஆக்கிரமித்து, நிரந்தரமாகவே என்னுடன் தங்கி விட்டது.

உண்மையிலேயே அது மிகவும் உயர்ந்த அனுபவந்தான். அனுபவங்கள் அனைத்துக்கும் அதுதான் அரசன் என்றே கூறிவிடலாம்.

அது உயரிய அனுபவம் நிரந்தரமாக என்னை ஆக்கிரமித்த போதுதான் அதன் சுயரூபம் எனக்குத் தெரிந்தது.

அது சிறுகச் சிறுக எனது உடல் ஆரோக்கியத்தைச் சிதைத்து விட்டது.

அப்போதுதான் எனக்குச் சந்தேகம் ஏற்பட ஆரம்பித்தது.

உண்மையிலேயே இது உயர்ந்த நிலையாக இருக்கும் பட்சத்தில் இது பல வகையிலும் நமக்கு உதவியாக அல்லவா இருக்க வேண்டும்?

நமது உடல் ஆரோக்கியத்தைக் குலைக்கும் இது எப்படி உயர்வானதொன்றாக இருக்க முடியும்?

பஸ் நிலையத்துக்குப் போய் விடலாம் என நினைத்து ஒரு தெரு வழியே பயணிக்கிறோம்.

ஆனால் அந்தத் தெருவோ, அதற்கு மேல் எந்தப் பாதையும் இல்லாமல் திடுமென முடிந்து விடுகிறது.

அப்படிதான் எனது பயணமும் முடிந்து விட்டது. பரவசநிலையிலிருந்து விடுபட்டால்தான் உடலைக் காக்க முடியும் என்ற நிலையில், பாடுபட்டு அடைந்த அந்தப் பரவசநிலையையும் கொஞ்சங் கொஞ்சமாக அப்புறப்படுத்த வேண்டியதாகி விட்டது.

இதுவரையிலும் பயணித்த பாதை தவறானதா? இனி என்ன செய்வது? எதுவுமே எனக்குப் புலப்படவில்லை.

எல்லா ஞானிகளும் நாம் முட்டி நின்ற அந்தத் தெருவுக்குதான் வழி காட்டியுள்ளார்கள்.

அந்தப் பரவசநிலை சரியானதல்ல என்பதைத் தெரிந்ததால் அதையும் உதறித் தள்ளி விட்டேன். இனி நான் என்ன செய்ய வேண்டும் எனப் புரியவில்லை.

நான் இந்தப் பரவசநிலையில் இருக்கும் போது இது மிகவும் உதவியாகவே இருந்தது.

எந்தப் பிரச்சினையை நான் எதிர்கொண்ட போதிலும் அது எனது மனதில் எந்தப் பாதிப்பையும் ஏற்படுத்துவது இல்லை.

நான் மிகவும் நிறைவாகவே இருந்தேன்.

ஆனால் இந்தப் பரவசநிலையை எவராலும் நிரந்தரமாக வைத்துக் கொள்ள முடியாது.

இந்தப் பரவசநிலையை ஒதுக்கித் தள்ளி விட்டு, நான் தரை இறங்கிய நிலையில், மிகச் சாதாரணமான பிரச்சினைகள் கூட என்னைப் பாதிக்க ஆரம்பித்தன.

இதுவரை அந்தப் பரவசநிலையைக் கேடயமாகப் பயன்படுத்தி எனக்கு ஏற்படும் பிரச்சினைகளையெல்லாம் எதிர்கொண்டு வந்திருந்தேன்.

இப்போது பாதுகாப்புக் கவசம் எதுவும் இல்லாத நிலையிலிருந்தேன்.

பரவசநிலைக்குப் பதிலாக நான் இன்னுமொரு பாதுகாப்புக் கவசத்தை அமைத்துக் கொள்ள வேண்டும்?

இந்நிலையில்தான் மன அனுபவங்களைப் புறக்கணித்து விட்டு, நாம் சந்திக்கும் பிச்சினைகள் அனைத்தையும் நேருக்கு நேராக எதிர்கொள்வதுதான் சரி என்பதைப் புரிந்து கொண்டேன்.

மன அனுபவங்களைப் புறக்கணித்த நிலையில் மனதும் சுதந்திரமாக இயங்க ஆரம்பித்து விட்டது.

புரிய வேண்டியதைப் புரிந்து கொண்டு விட்டேன் என்பதும் புரிந்தது.

நான் என்ன புரிந்து கொண்டேனோ அதையே அறிவியலாக்கிக் கொடுக்கும் போது

பலரும் இதனை எளிதாகவே புரிந்து கொண்டு விட்டனர்.

இதில் பிரம்மாண்டம் எதுவும் கிடையாது.

என்னை ஒரு சராசரி மனிதனாகத்தான் பார்க்கிறேன். நான் வழங்கும் ஞானமும் சராசரி மனிதரால் புரிந்து கொள்ளும் தன்மையில்தான் உள்ளது.

சிலர் ஞானத்தை சக்தி நிலைகளோடு இணைத்துப் பார்த்து விடுகின்றனர்.

இதனால் அவர்களும் இந்த சாசரி ஞானத்தைப் புரிந்து கொள்ளத் தவறி விடுகின்றனர்.

அனைவருக்கும் பயன்படும் சாதாரண, சராசரியான தன்மையில் இருப்பதுதான்

இந்த ஞானத்தின் உண்மையான பிரம்மாண்டம்.

சராசரியான தன்மையிலுள்ள இந்த ஞானம்

ஆன்மிக உலகத்துக்கு இப்போதுதான் அறிமுகமாகியுள்ளது.

மற்ற ஞானிகளும் அவர்களையறியாமல் இந்த ஞானத்தைத்தான் அடைந்துள்ளார்கள். அவர்களையறியாமல் அவர்களுக்கு ஏற்பட்டதால் ஞானத்தைப் பற்றிய தெளிவான அம்சம் அவர்களுக்குத் தெரியாமலிருந்துள்ளது.

உண்மையில் அவர்களாலும் புரிந்து கொள்ள முடியாதிருந்த ஞானந்தான் நாம் புரிந்து கொண்ட சராசரி ஞானம் என்பதையும் நாம் புரிந்து கொள்ள வேண்டும்.

இதை எவரெல்லாம் புரிந்து கொள்கிறார்களோ அவர்களெல்லாம் உண்மையில் அந்த ஞானிகளை விடவும் உயர்ந்தவர்களே. ★

V.A.P. **சரவணன்,** சேலம்.
செல் : 99942 05880

# கேள்வி ? பதில்...

முக்திக்கு வழி தெரியாமல் ஏங்கித் தவிப்போர் பலர் இருக்கும் போது எளிதில் ஞானம் பெற ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் அணுகுமுறை என்ன?

**கேள்வி :** ஞானம் பெறவும் விடுதலை அடையவும் தங்களுடைய குடும்ப வாழ்க்கையை துறந்து, ஆன்மிக அமைப்புகள் பலவற்றில் தங்கி பயிற்சிகளில் ஈடுபட்டு, முக்திக்கு வழி தெரியாமல் ஏங்கித் தவிப்போர் பலர் இருக்கும் போது, ஸ்ரீ பகவத் ஐயா மிகவும் எளிதாக ஞானத்தை வழங்குவதாக கூறுகிறீர்கள். மற்ற ஆன்மிக அமைப்புகளின் கருத்திற்கும், பகவத் ஐயாவின் கருத்திற்கும் உள்ள வித்தியாசம் என்ன? பகவத் அய்யாவின் அணுகுமுறை எந்த அளவிற்கு தீவிரமாக ஞானத்தை தேடுபவர்களுக்கு பயனுள்ளதாக அமைந்துள்ளது?

**பதில் :** மனக்கவலையில் இருந்தும் பிரச்சனையிலிருந்தும் விடுபடுவதற்காக தன்னுடைய குடும்ப வாழ்க்கையை துறந்து ஓர் ஆன்மிக அமைப்பில் தங்கி பயிற்சிகளில் ஈடுபட்டு, முக்திக்கு வழி தெரியாமலும் மீண்டும் குடும்பத்துடன் இணைய முடியாமலும் தவித்த ஒரு பெண்ணுக்கு ஐயாவின் ஞானப்புரிதல் எப்படி உதவியது என்ற அந்த பெண்ணின் அனுபவம் பல ஆன்மிக அமைப்புகளில் பாடுபடும் ஆன்மிக சாதகர்களுக்கு உதவியாக இருக்கும் என்ற அடிப்படையில் இதை அனைவருக்கும் பகிர்கிறோம்...

**இனி அந்த பெண்மணி :**

"நான் ஒரு பெண்மணி. எனக்கு வாழ்க்கையில் ஏற்பட்ட பிரச்சினை, துன்பத்திற்காக ஆன்மிகத்தை நாடிச் சென்றேன். தொடக்கத்தில் நான் செய்த பயிற்சிகளால் என்னுடைய வேதனைகளுக்கு கொஞ்சம் ஆறுதல் கிடைத்தது. நாட்கள் செல்லச் செல்ல ஆன்மிக அமைப்பிலேயே தங்கி, கர்மாக்களைக் கழித்து முக்தி பெற்று, பிறவியில்லா நிலையை அடைந்து விடுதலையுடன் வாழ வேண்டும் என்று குடும்ப வாழ்க்கையை விட்டுவிட்டு ஆஸ்ரமத்திற்கு சென்று விட்டேன்...

"அந்த ஆசிரமத்திலேயே தங்கி, ஆசிரமத்திற்கு தேவையான வேலைகளை செய்துகொண்டு, தொடர்ந்து சாதனா என்னும் பயிற்சியில் ஈடுபட்டு வந்தேன்...

"அந்த அமைப்பின் குரு, 'சாதனா என்னும் பயிற்சியைத் தவிர முக்தி பெறுவதற்கு வேறு எந்த வழியும் இல்லை' என்று கூறி வந்தார். மேலும் 'விழித்திருக்கும் நேரமெல்லாம் சாதனாவில் முழுமூச்சாக ஈடுபட்டால் இந்த பிறவியிலேயோ அல்லது அடுத்த பிறவியிலேயோ முக்தி கிடைக்க வாய்ப்பு உள்ளது' என்பார்...

"அதனால் அவரது வார்த்தையை வைராக்கியமாக எடுத்துக்கொண்டு முழுமூச்சாக விழித்திருக்கும் நேரங்களில் எல்லாம் சாதனாவில் ஈடுபட்டேன். இதனால் உடல் வெப்பம் அடைந்தது. உடல் இளைத்தேன். வயிற்று புண் ஏற்பட்டது. உறக்கம் இல்லாமல் போனது. முழுவதுமாக சக்தி இழந்து போனேன். என்னால் சாதனாவில் ஈடுபட முடியாத நிலைக்கு சென்று விட்டேன். அதனால் மனதில் குற்ற உணர்ச்சி ஏற்பட்டது.

"ஆசிரமத்தை விட்டு வெளியே செல்லவும் மிகவும் பயமாக இருந்தது. அதற்கு காரணம் அந்த அமைப்பின் குருநாதர் தான். 'இந்த பிறவியில் நீங்கள் என்னை விட்டு நீங்கினால் இன்னும் ஏழு பிறவிகளுக்கும் மோசமான கர்மாக்களால் கடும் கஷ்டத்தை அனுபவிக்க வேண்டியது வரும்' என்றும், 'நீங்கள் என்னை விட்டு விலகுவது என்பது குருவுக்கு செய்யும் குரு துரோகம்' என்றும் கூறுவார். எனக்கு துரோகம் செய்தால் மிகவும் மோசமான நிலையை அடைவீர்கள் என்று கூறிவிட்டு அந்த ஆசிரமத்தில் இருந்து வெளியேறிய சிலர், குரு துரோகத்தினால் துர் மரணம் அடைந்ததாக தெரிவித்தார்...

"எனக்கு பயிற்சி செய்ய உடல் முழுவதுமாக ஒத்துழைக்கவில்லை. மனமும் குற்றவுணர்வு என்ற கோரப்பிடியில் சிக்கித் தவித்தது. வேறு வழி தெரியவில்லை. ஆசிரமத்தைவிட்டு வீட்டிற்கு வேறு வழி தெரியாமல் வந்து சேர்ந்தேன். வந்தாலும்

குடும்பத்துடன் இணைந்து வாழ முடியாமல் தவித்தேன். பிறகு மருந்துகள் எடுத்துக் கொண்டு, ஆரோக்கிமான உணவை உண்டும் கூட மனதில் எப்போதும் குற்றவுணர்ச்சி குடி கொண்டே இருந்தது. விழித்திருக்கும் நேரமெல்லாம் "குரு துரோகம், ஏழு பிறவிகளிலும் கர்மாவில் பாதிப்பு" என்ற எண்ணம் திரும்பத் திரும்ப ஏற்பட்டு என்னை நிலைகுலைய செய்தது. நான்கு ஐந்து முறை தற்கொலைக்கு முயன்று, எப்படியோ ஒரு வகையில் குடும்பத்தினரால் காப்பாற்றப்பட்டேன்...

"மனவேதனை என்னை சுற்றி வளைத்தன. வேறு எந்த வழியும் தெரியாமல் தவித்துக் கொண்டிருந்தேன். இறைவனை கண்ணீர் மல்க வேண்டி எனக்கு ஏதாவது ஒரு வழி காட்டுங்கள் என்று விடிய விடிய பிரார்த்தனையில் ஈடுபட்டேன்.

"அடுத்த நாள் எனது நிலையை உணர்ந்த எனது கணவரின் நண்பர் ஒருவர் "**சிந்தனையும் சிந்திப்பும்**" எனும் ஸ்ரீ பகவத் ஐயாவின் புத்தகம் ஒன்றை என்னிடம் கொண்டுவந்து கொடுத்து "இதைப் படியுங்கள் உங்களது மனக்கவலை தீர்ந்து விடும்" என்றார். சிறிய புத்தகம் என்பதால் எடுத்த நிலையிலேயே அப்படியே படித்து முடித்தேன். திரும்பத் திரும்பப் பல முறை படித்தேன். பல நாட்களாக உறைந்து போயிந்த எனது மனம் உருக தொடங்கியது.கண்களில் இருந்து கண்ணீர் மடைதிறந்த வெள்ளம் என பாய தொடங்கியது. மனம் இளகியது. உடல் எடை இல்லாமல் காற்றில் பறப்பது போன்ற நிலைக்கு போய்விட்டது. நெடுநாள் தலையில் சுமந்த சுமையை கீழே இறக்கி வைத்த ஓர் உணர்வு ஏற்பட்டது. பகவத் ஐயா மீது நன்றி உணர்வு அருவியாக கொட்டியது. எனது நெடுநாள் துன்பத்திலிருந்து மீட்க வந்த கடவுளாகவே பகவத் ஐயா எனக்கு காட்சி அளித்தார்...

"இனி நான் புரிந்து கொண்டதை உங்களிடம் கூறிக்கொள்ள விரும்புகிறேன். குரு துரோகம் என்ற குற்ற உணர்வும், ஏழு ஜென்மத்தில் ஞானம் கிடைக்காது என்ற மனவருத்தமும், உணர்வும் கூட மனதில் தோன்றி மறையக் கூடிய ஓர் எண்ணமே என்று தெள்ளத் தெளிவாக புரிந்தது. சுதந்திரமாக இயங்கும் மனதின் இயக்கத்தில் எனது அறிவின் குறுக்கீடுதான் ஒட்டுமொத்த பிரச்சினை என்பது எளிதாக புரிந்தது. மனதின் சுதந்திரமான இயக்கத்தில் எனது அறிவின் குறுக்கீடு படிப்படியாக குறைந்தன. மனதின் வழியாகத்தான் நாம் எதையும் புரிந்து கொள்கிறோம். அப்படிப்பட்ட மனமே தோன்றி மறைய கூடிய ஒன்றுதான் என்ற ஒரு பெரிய கண்டுபிடிப்பு பகவத் ஐயாவின் மூலம் எனக்கு கிடைத்தது. எனது அத்தனை மன கட்டுகளில் இருந்தும் விடுபட்டேன். ஞானத்தை புரிந்து கொண்டேன். விடுதலை தானாக ஏற்பட்டது...

"குரு என்பவர் மன்னிப்பவராகவும், நம்மை மேல்நிலைக்கு உயர்த்த கூடியவராகவும், கர்ம பந்தங்களிலிருந்து விடுவிக்க செய்பவராகவும் இருப்பாரே தவிர ஒருபோதும் நம்மை பயமுறுத்துபவராகவும் குற்ற உணர்வை ஏற்படுத்த கூடியவராகவும், கர்ம பந்தங்களை ஏற்படுத்த கூடியவராகவும் இருக்க மாட்டார் என்பது புரிந்தது...

"பகவத் ஐயாவின் எல்லா நூல்களையும் படித்து விட்டேன். "ஞான வாழ்வின் நடைமுறை யதார்த்தங்கள்" புத்தகம், "பகவத் பாதை-ஞான பெட்டகம்" என்ற புத்தகங்கள் படிப்பது, தினமும் அய்யாவின் ஆடியோ Youtube -ல் கேட்பது மட்டுமே என்னுடைய தினசரி வாடிக்கையாக இருக்கிறது. ஆனால் நான் இன்னும் பகவத் ஐயாவை நேரில் சந்தித்தது, தொலைபேசியில் பேசியது கூட கிடையாது. ஞான முகாமில் கலந்து கொண்டு அவரை நேரில் தரிசித்து எனது நன்றிகளை தெரிவிக்க வேண்டும் என்று எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன். கேட்பதற்கு எனக்கு எந்த கேள்வியும் இல்லை. ஐயாவை பார்த்து நன்றி உணர்வை வெளிப்படுத்துவது மட்டுமே நோக்கமாக இருந்து வருகிறது...

"இப்பொழுதெல்லாம் என்னால் நன்றாக சாப்பிட முடிகிறது. பசிக்கச் செய்கிறது. நன்றாக தூங்க முடிகிறது. குடும்பத்துடன் இணைந்து அனைவருக்கும் தேவையான வேலைகளை நன்றாக செய்து கொடுக்க முடிகிறது. என்னைப்போல் எத்தனையோ நபர்கள் தங்களுக்கு ஏற்பட்ட துன்பங்களிலிருந்து விடுபட தெரியாமல் எத்தனையோ ஆன்மிக அமைப்புகளில் தங்கி தங்களுடைய குடும்ப வாழ்க்கையை சிதைத்து கொண்டு தங்கள் உடல் நலத்தை முழுவதுமாக இழந்து, குற்றவுணர்வு எனும் கோரபிடியில் சிக்கி தவிக்கிறார்கள். அவர்களில் யாரையேனும் எனது சொந்த அனுபவம் மீட்டால், அதுவே நான் பகவத் ஐயாவிற்கு செய்யும் நன்றிக்கடனாகும். நன்றி."

"சிந்தனையையும் சிந்திப்பையும் பிரித்து புரிந்து கொண்டு, சிந்தனையில் நமது பங்களிப்பு இல்லை, சிந்திப்பில் நமது பங்களிப்பு உண்டு என்று அறிந்து கொள்வதே ஞானம்."

# ஆசிரியர் பகுதி

**K.S. ஜீவமணி**
செல் : 97891 65555

பகவத் பாதையில் பயணிக்கும் அனைவருக்கும் சக பயணியின் வணக்கம்.

வெளிநாட்டில் வசிக்கும் ஒரு சகோதரி என்னிடம் தொலைபேசியில் தொடர்பு கொண்டு கேள்வி ஒன்றை எழுப்பினார். "ஞான புரிதல் ஏற்படுகிறது. அதன் பிறகும் மனம் பழைய நிலைக்கே செல்கிறது. அது ஏன்?" இவர் ஞான முகாமில் கலந்து கொண்டதில்லை. அய்யாவின் அனைத்து நூல்களையும் வாங்கி அதில் சிலவற்றை படித்திருக்கிறார். அலைபேசியில் தொடர்பு கொண்டு அவ்வப்போது சில சந்தேகங்களை கேட்பார். இவருக்கு புரிதலும் ஏற்பட்டது. அதன் பிறகு சிறிது காலம் தொடர்பில் இல்லாமல் இருந்தார். தற்போது சில நாட்களுக்கு முன் தொடர்பு கொண்டு இக்கேள்வியை எழுப்பினார். இவர் ஏன் இக் கேள்வியை எழுப்பினார்? இவருக்கு என்ன நிகழ்ந்துள்ளது? இவர் மட்டுமல்ல ஞான முகாமில் கலநது கொண்டவர்களில் பலர் கூட இக் கேள்வி எழுப்புகின்றனர்.

பிரச்சினையில் இருப்பவர்கள் அய்யாவின் நூல்களைப் படிக்கும் போதோ அல்லது ஞான முகாமில் கலந்து கொள்ளும் போதோ **அகத்தில் செய்வதற்கு எதுவுமில்லை** என்ற ஐயாவின் கருத்தை ஏற்றுக் கொள்கிறார்கள். ஏற்றுக்கொண்டு அகப் போராட்டத்தை கைவிட்ட நிலையில் மனதில் துன்பத்தை தந்த உணர்வுகளும் பிரச்சனைகளும் பிரவகித்து ஓட தொடங்குகின்றன. மனம் ஓர் அமைதியான நிலைக்கு திரும்புகிறது. அதனால் இவர்கள் ஒரு நல்ல மாற்றத்தை உணர்கிறார்கள். இதனால் இவர்கள் "ஞானம் பெற்றதால் மனம் நல்ல மாற்றம் அடைந்துள்ளது" என்ற முடிவுக்கு வந்துவிடுகிறார்கள். அதேநேரம் அந்த மாற்றத்தின் மீதும் அந்த அமைதி என்ற அனுபவத்தின் மீதும் ஈர்ப்பு ஏற்பட்டு அதன் மீது ஆர்வம் கொள்கிறார்கள். பிறகு அந்த அமைதியான அனுபவம் நீடிக்க வேண்டும் என்று அந்த அனுபவத்தின் மீது ஈடுபாடு கொண்டு எதிர்பார்க்க ஆரம்பித்து விடுகிறார்கள். மீண்டும் ஏதாவது புறப் பிரச்சினைகள் ஏற்படும் போது அகத்தில் அமைதி போய்விடுகிறது. அதனால் "முன்பு ஏற்பட்ட அமைதி போய் விட்டனவே நாம் இன்னும் முழுமையான ஞானம் பெறவில்லையோ" என்று தான் அடைந்த ஞானத்தின் மீது ஐயம் கொள்ள ஆரம்பிக்கிறார்கள். இதுதான் பலருக்கும் நிகழ்ந்து கொண்டிருக்கிறது. இதற்கு காரணம் அகத்தில் செய்வதற்கு எதுவுமில்லை என்ற ஐயாவின் கருத்தை ஒரு நல்ல கருத்தாக ஏற்றுக் கொள்கிறார்களே தவிர அந்த உண்மையை இவர்கள் கண்டுபிடிக்கவில்லை. வெறும் கருத்தாக மட்டும் ஏற்றுக் கொள்ளும்போது புரிந்து கொண்டதை புறக்கணிககும் தன்மைக்கு வந்து அந்த அனுபவத்தின் மீது ஆர்வம் கொள்ள ஆரம்பித்து விடுகிறார்கள். எனவே ஞானம் என்பது அவரவர்களின் சொந்த கண்டுபிடிப்பாக மாறவேண்டும். அப்போதுதான் அவர்கள் பெற்ற ஞானத்தில் உறுதி ஏற்படும். மனம் நமது கட்டுப்பாட்டில் இல்லை என்ற நமது சொந்த கண்டுபிடிப்பே மனதை நிர்வகிக்கும் நமது பொறுப்பில் இருந்து நம்மை விடுவிக்கும். இந்த தெளிவில் உறுதி பெறுவதற்கான வாய்ப்பாகத்தான் நமது ஞான உறுதி முகாம் அமைந்துள்ளது.

அந்த வகையில் அக்டோபர் மாதம் 12, 13, 14 ஆம் தேதிகளில் ஞான உறுதி முகாம் சேலம் ஸ்ரீ பகவத் பவனில் மிகவும் சிறப்பாக நடைபெற்றது. இதில் 70 அன்பர்கள் கலந்து கொண்டு பயனடைந்தனர். இதில் ஐயாவின் உரையோடு கேள்வி-பதில்களுக்கான நேரமும் அதிகமாக வழங்கப்பட்டன. அவரவருக்கு ஏற்படுகின்ற கேள்விக்கான (ஐயங்கள்) சரியான பதிலே அவர்களின் கண்டுபிடிப்புக்கும் ஞானத்தை உறுதி செய்வதற்கும் உதவியாக இருக்கும்.

மேலும் வருகின்ற டிசம்பர் மாதம் 30ஆம் தேதி மாலை 6 மணி முதல் ஜனவரி ஒன்றாம் தேதி மதியம் 3 மணி வரை மீண்டும் ஒரு ஞான உறுதி முகாம் நடைபெற உள்ளது. ஒவ்வொரு ஞான உறுதி முகாமிலும் 30 அன்பர்கள் மட்டுமே கலந்து கொள்ளுமாறு ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. அப்போதுதான் அது கலந்துகொள்ளும் அனைவருக்கும் ஒரு முழுமையான பலனை தரும். எனவே மாதம் ஓர் ஞான முகாமும் இரண்டு மாதத்திற்கு ஓர் உறுதி முகாமும் நடைபெற ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. இதை அனைவரும் பயன்படுத்திக் கொள்வதோடு தேடுதல் உள்ள அன்பர்களும் கலந்துகொள்ள செய்யுமாறு அன்புடன் கேட்டுக்கொள்கிறோம். ஞானத்தை உறுதிப்படுத்துவோம். உலகெங்கும் கொண்டு செல்வோம்.

நமது ஸ்ரீ பகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்கள் அனைவருக்கும் தீபாவளி நல்வாழ்த்துக்களை தெரிவித்துக் கொள்கிறோம்.

**அகம் ஞானம் என்று சுய ஒளியால் பிரவகிக்கட்டும்!**
**புறச் செயல் அனைத்தும் அறச் செயலாய் மலரட்டும்..!!**

# ஸ்ரீ பகவத் பவன் புரவலர்கள்

அன்பு உள்ளங்களுக்கு ஓர் அன்பான வேண்டுகோள்.

ஸ்ரீ பகவத் மிஷன் என்பது பணப்புழக்கம் மிகுந்த ஒரு கார்ப்பரேட் நிறுவனம் அல்ல. கட்டணம் வாங்கிக் கொள்ளும் கல்வி நிறுவனமும் அல்ல. ஐயா அவர்களுக்கு தங்கியிருக்க வீடு ஒன்று தேவைப்பட்டது. நம் அனைவரது ஒத்துழைப்பாலும் **ஸ்ரீ பகவத் பவன்** உருவானது. தற்போது அந்த இல்லம் ஐயாவின் இருப்பிடமாகவும், கற்றிட வருவோரின் குருகுலமாகவும், நம் அனைவரது பண்ணை வீடாகவும் செயல்பட்டு வருகிறது. ஸ்ரீ பகவத் பவனின் நித்திய நிர்வாகச் செலவினங்களுக்கான நித்திய நிதி ஒன்றும் தேவைப்படுகிறது.

'நிரந்தர வைப்பு நிதி எதனையும் தற்போது உருவாக்க வேண்டாம்' என்று ஐயா கூறிவிட்டதால் நிரந்தரப் புரவலர் குழு ஒன்றை உருவாக்க முடிவு செய்துள்ளோம். முதற்கட்டமாக 100 ஆர்வலர்கள் கொண்ட புரவலர் குழு ஒன்று மே மாதம் முதல் தொடங்கப்பட்டுள்ளது. அதன்படி ரூ. 1000/- முதல் ஏதாவது ஒரு தொகையை மாதந்தோறும் அல்லது ரூ. 12,000/- முதல் ஏதாவது ஒரு தொகையை வருடந்தோறும் வழங்கும் ஆர்வம் உள்ளவர்கள் தங்களை ஸ்ரீ பகவத்பவனின் புரவலர்களாக இணைத்துக் கொள்ளலாம். **அதற்காக ஏற்றுக்கொண்ட முழுத்தொகையையும் மாதந்தோறும் வழங்கியே ஆகவேண்டும் என்ற நிபந்தனை எதுவும் புரவலர்களுக்குக் கிடையாது.**

நமது வேண்டுகோலை ஏற்று இம்மாதத்திலிருந்து புரவலர்களாக இணைந்தவர்கள் :

1. திரு. **இராஜவேலன்** மற்றும் திரு. **சித்தல்குமார்,** மயிலாடுதுறை, ஸ்ரீ பகவத் மிஷன் மையம்
2. திரு. **தீபக்,** சென்னை
3. திரு. **பாபுலால்,** பெங்களூர், ஸ்ரீ பகவத் மிஷன் மையம்
4. திரு. **முருகேசன்,** சென்னை

இவர்கள் அனைவருக்கும் உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம். புரவலர்களுக்கான தொகையை வங்கிக் கணக்கில் நேரடியாக செலுத்துபவர்கள் **HDFC Bank Sri Bagavath Mission A/c No. 15907620000075, NEFT IFSC : HDFC 0001590 Car Street Branch, Salem** என்ற கணக்கில் செலுத்தலாம். **Bank A/c-** ல் நேரடியாக செலுத்தியவர்கள் தகவலை **97891 65555** என்ற எண்ணிற்கு தெரிவிக்க வேண்டுகிறோம்.

## ஸ்ரீ பகவத் ஐயா அவர்களுக்கு உதவியாளர் தேவை

ஸ்ரீ பகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்களுக்கு வணக்கம்.

நமது பகவத் மிஷன் குடும்ப உறுப்பினர் மதுரை திரு. **சிவக்குமார் ஐயா** அவர்கள் இரண்டு ஆண்டுகளாக நமது **பகவத் ஐயா** அவர்களுக்கு உதவியாளராக இருந்து தொண்டாற்றி வருகிறார். இவருக்கு நம் அனைவரின் சார்பாகவும் உளமார்ந்த நன்றியை உரித்தாக்குகிறோம்.

தற்போது இவர் தன் குடும்ப பொறுப்பு நிமித்தமாக மதுரை செல்ல வேண்டி இருப்பதால் ஸ்ரீ பகவத் ஐயா அவர்களுடன் தங்கி தொண்டாற்ற ஓர் உதவியாளர் தேவைப்படுகிறார். ஐயாவின் கருத்தில் ஈடுபாடு கொண்டவராகவும் கம்ப்யூட்டர் இயக்க தெரிந்தவராகவும் கார் ஓட்ட தெரிந்தவராகவும் இருந்தால் மிகவும் சிறப்பாக இருக்கும்.

தம்பதியினராக வந்து தங்கி தொண்டாற்ற விருப்பம் உள்ளவர்களும் விண்ணப்பிக்கலாம். தகுதியானவர்கள் கீழ்க்கண்ட எண்ணில் தொடர்பு கொள்ளும்படி அன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

**ஸ்ரீ பகவத் மிஷன்,** சேலம்.
செல் - **9994205880, 97891 65555**

# நிகழ்ச்சி நிழல்கள்



ஸ்ரீ பகவத் ஐயா அவர்களுடன் திரு. பத்தாக் அவர்கள்



ஸ்ரீ பகவத் ஐயா அவர்களுடன்
அஃ்கு ஹீலர் அ. உமர் பாருக் மற்றும்
தேவராஜன் அவர்கள்



ஞான உறுதி முகாமின் போது



காலை நடைபயிற்சிக்குப் பிறகு..



ஞான உறுதி முகாமின் போது



ஞான உறுதி முகாமின் போது



ஞான உறுதி முகாமின் போது

# பகவத் பாதை சந்தா விபரம்

நமது பகவத் பாதை மாத இதழானது தற்போது மாதம் 10-ம் தேதிக்குள் தபாலில் அனுப்பி வைக்கப்படுகிறது. இது அதிகபட்சமாக 15 நாட்களுக்குள் அனைவரது இல்லங்களையும் வந்து சேரும் என்று எதிர் பார்க்கிறோம். எனவே ஒவ்வொரு மாதமும் 25ம் தேதிக்குள் “பகவத் பாதை” தங்களுக்கு வராதவர்கள் போனில் தொடர்பு கொண்டோ அல்லது "Pathai Missing" என்று Type செய்து சந்தா எண்ணுடன் தங்களது முழு முகவரியையும் கீழ்கண்ட எண்ணுக்கு SMS அனுப்பியோ தகவல் தெரிவிக்குமாறு கேட்டுக் கொள்கிறோம்.

இதுவரை சந்தா செலுத்தாதவர்கள், அல்லது புதுப்பிக்காதவர்கள் கீழ்கண்ட ஏதேனும் ஒரு வகையில் சந்தா செலுத்துமாறு அன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

பகவத் பாதை மாத இதழுக்கு சந்தா செலுத்த விரும்புபவர்கள் கீழ்க்காணும் ஏதேனும் ஒரு வழியில் செலுத்தலாம்.

**ஓர் ஆண்டு சந்தா – ரூ.100/- | ஐந்தாண்டு சந்தா – ரூ. 500/- | ஆயுள் சந்தா – ரூ, 1000/-**

சந்தா தொகையை "Sri Bagavath Mission" என்ற பெயரில் M.O. அல்லது சேலத்தில் செல்லத் தக்க D.D. (or) Cheque மூலம் அனுப்பலாம்.

www.sribagavathmission.org (or) www.praveagam.org என்ற இணைய தளத்தில் Credit Card / Debit Card மூலமாகவும் சந்தா செலுத்தலாம்.

வங்கிக் கணக்கில் நேரடியாக செலுத்துபவர்கள் HDFC Bank-ல் Sri Bagavath Mission A/c No. 15907620000075, NEFT IFSC: HDFC 0001590 என்ற கணக்கில் செலுத்தலாம்.

Bank A/c ல் நேரடியாக செலுத்தியவர்கள் உங்கள் முகவரியை 92620 61838 என்ற எண்ணிற்கு SMS மூலம் தகவல் தெரிவிக்க வேண்டுகிறோம்.

# ஸ்ரீ பகவத் பவனில் நவம்பர் மற்றும் டிசம்பர் மாதத்தில் 4 நாள் ஞான முகாம்

ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் நான்கு நாள் ஞான முகாம் வருகின்ற நவம்பர் மற்றும் டிசம்பர் மாதங்களில் சேலத்தில் நடைபெற உள்ளது.

இடம் : **ஸ்ரீ பகவத் பவன்,** ஜருகு மலை அடிவாரம்,
கொடம்பக்காடு, பெரிய கவுண்டாபுரம், காரிப்பட்டி (Po.) சேலம் - 636 106.

## நவம்பர்

நாள் : **22.11.2018** வியாழன் முதல்
**25.11.2018** ஞாயிறு வரை
நேரம் : வியாழன் மாலை 5.00 மணி முதல்
ஞாயிறு மதியம் 3.00 மணி வரை

உங்கள் வருகையை முன் அறிவிப்பு செய்யுமாறு அன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

## டிசம்பர்

நாள் : **22.12.2018** சனி முதல்
**25.12.2018** செவ்வாய் வரை
நேரம் : சனி காலை 9.00 மணி முதல்
செவ்வாய் மதியம் 3.00 மணி வரை

செலவு பகிர்வு ரூ. **5000/-** நபர் ஒருவருக்கு

செலவு பகிர்வுக் கட்டணத்தை வழங்க இயலாதவர்கள் தனிப்பட்ட முறையில் விண்ணப்பிக்கலாம்.
அனைவரும் வருக! ஞானத் தெளிவு பெறுக...

- ஆண்கள் மற்றும் பெண்கள் தங்குவதற்கென தனித்தனி இடவசதி உள்ளன.
- ஞான முகாமில் 50 அன்பர்கள் மட்டுமே கலந்துகொள்ள இடமிருப்பதால் முன்பதிவு அவசியம்.

### முன்பதிவு செய்யும் வழிகள்

M.O, D.D. (or) Cheque : வரைவோலை அனுப்புபவர்கள் A/c Sri Bagavath Mission என்ற பெயரில் சேலத்தில் செல்லத்தக்கதாக அனுப்புமாறு கேட்டுக்கொள்கிறோம்.

Direct Payment : நேரடியாக வங்கியில் செலுத்துபவர்கள் கீழ்க்கண்ட வங்கிக் கணக்கில் செலுத்தலாம்.

**HDFC Bank Sri Bagavath Mission A/c No. 15907620000075,**
**NEFT IFSC : HDFC 0001590 Car Street Branch, Salem**

**ஸ்ரீ பகவத் மிஷன்,** 31, இராமலிங்கசாமி தெரு, அம்மாப்பேட்டை, சேலம்-3. கைப்பேசி : 9994205880, 97891 65555

# ஜென் கதை

## "வேதத்தை கீழே போடு"

சாதகன் ஒருவன் ஞானத்தை தேடி பல குருமார்களை சந்தித்து வந்தான். அவன் சந்தித்த பல குருமார்களும் வேதத்தையும் உபநிஷத்தையும் மேற்கோள் காட்டி விளக்கம் அளித்தார்கள். ஆன்ம சாதகன் வேதம், உபநிஷத்து மட்டுமே தனக்கு ஞானத்தை வழங்க முடியும் என்று ஆழ்ந்த நம்பிக்கையுடன் முழுமையாக படித்து இறுதியாக பண்டிதனாகவே மாறிப்போனான்.

வேதத்தின் கூற்றுபடி தன்னுடைய நடை, உடை, பாவனை என அனைத்தையும் மாற்றிக் கொண்டான். ஆனால் அவனுக்கு ஞானம் மட்டும் கிடைக்கவே இல்லை. மனதில் பெரும் போராட்டம் இருந்து கொண்டே இருந்தது. **ஞானத்தின் கடைசி கதவு விசாரணையால் மட்டுமே திறக்கும்** என்ற கூற்று வாழும் ஞானியை நோக்கி அவனை அழைத்துச் சென்றது.

இவன் சந்தித்த ஞானி வேதத்தையும் உபநிஷத்துகள் எதையும் மேற்கோள் காட்டவேயில்லை. ஆனால் அவைகளின் கூற்றுப்படியே அவர் வாழ்ந்து கொண்டிருந்தார். ஒவ்வொரு முறையும் சாதகன் அவரிடம் விவாதிக்கும் போது வேதத்தில் தனக்குத் தெரிந்தவற்றை அழகுற எடுத்துரைத்து வந்தான்.

"வேதமும் உபநிஷத்தும் கூறுவதை விட்டு விடு.. நீ என்ன புரிந்து கொண்டாய் அதை கூறு" என்று ஞானி பல முறை கேட்பார். இவன் வேதம் உபநிஷத்திலிருந்து மட்டுமே பதில் கொடுப்பான்.

"கொஞ்ச காலம் என்னுடன் தங்கி செல்" என்றார் ஞானி.

காலை நேர நடை பயிற்சியின் போது ஞானியும் அவனும் ஒரு காட்டுப் பகுதியில் நடந்து சென்றனர்.

அங்கே ஒரு பெரிய மரம் இருந்தது. அதனை ஒரு கொடி முழுமையாக ஆக்கிரமித்துக் கொண்டு படர்ந்து இருந்தது. மரத்தின் கிளைகள், இலைகள், பூக்கள், கனிகள் என எதுவுமே தெரியாத வண்ணம் கொடி ஆழ்ந்து, சூழ்ந்து, ஆக்கிரமித்து கொண்டிருந்தது. அந்த மரத்தைக் காட்டி "இது என்ன மரம்?" என்று கேட்டார் ஞானி.

"கொடிகள் படர்ந்து சூழ்ந்து இருப்பதால் என்ன மரம் என்று தெரியவில்லை" என்றான்.

"அப்படித்தான் நீயும் இருக்கிறாய்" என்றார் ஞானி.

மனதில் ஏதோ ஒரு பொறி தட்டியது போல் இருந்தாலும் அவனுக்கு முழுமையாக விளங்கவில்லை. "நான் தெரிந்து கொள்ள என்ன செய்ய வேண்டும்?" என்றான் சாதகன்.

"என்ன மரம் என்பதை தெரிந்து கொள்ள நாம் என்ன செய்ய வேண்டும்?" என்றார் ஞானி.

"மரத்தில் சூழ்ந்திருக்கும் கொடிகளை அகற்ற வேண்டும்" என்றான் சாதகன்.

"மரத்தை சூழ்ந்திருக்கும் கொடிகளை அகற்ற என்ன செய்ய வேண்டும்?" என்றார் ஞானி.

"மரத்தில் இருந்து கொடிகளை முழுவதுமாக நீக்கினால் மட்டுமே என்ன மரம் என்று தெரியவரும்" என்றான் சாதகன்.

ஞானி ஒரு கத்தியை எடுத்து மரத்தின் அடிப்பகுதியில் இருந்து படர்ந்த கொடியின் வேர் பகுதி அறுத்துவிட்டார். "என்ன மரம் என்று இனி தானாகவே தெரிந்து விடும்" என்றார் ஞானி. மேலும் "கொடி தானாகவே மடிந்துவிடும். காய்ந்த கொடிகள் கூட மரத்திற்கு உரமாகி விடும்" என்றார் ஞானி.

சாதகனுக்கு மண்டையில் ஏதோ சுரீர் என்று உரைத்தது. அதன் பின் அவரிடம் வேதத்திலிருந்து கருத்துகளை எடுத்து விவாதிப்பதில் இருந்து விடுபட்டான் சாதகன். இவ்வளவு காலம் அவன் மண்டையில் சுமந்து கொண்டிருந்த வேதம் உபநிஷத்துகள் அனைத்தும் தானாகவே அறுபட்டு கீழே விழுந்தன. தலையில் சுமந்து கொண்டு இருந்த பாரம் இறக்கி கீழே வைத்துவிட்டு அவன் சுய ஒளி பெற்று பிரகாசமாக தொடங்கினான்.

ஞானியிடமிருந்து ஞானத்தை தெளிவாக உள்வாங்கிக் கொண்டு ஊர் திரும்புவதற்கு முன்பாக கொடிகள் சூழ்ந்த பழைய மரத்தைப் பார்க்கச் சென்றேன். கொடிகள் முற்றிலும் நீங்கி மரம் சுயமாக பிரகாசித்துக் கொண்டிருந்தது. கொடி, மரத்தின் வளர்ச்சிக்கு உரமாக மாறியிருந்தது.

கொடிகள் முற்றிலும் நீங்கிய நிலையில் மரம் இப்போது போதிமரமாக அவனுக்கு காட்சி அளித்தது. நீயும் புத்தன் தான் என்று அவனது உள்ளுணர்வு கூறுவதை உணர்ந்தான்.

Registration Number of the Registered News Paper TNTAM/2014/57698
Postel Registration Number : TN/WR/SL(E)/22/2018-2020 Posted at Salem HOP 636001. On 10th of every month.

Published by Shri. V.A.P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu. India.
Printed by Shri. R. Jayavel at Sree Jayavel Press, 08/11, Gandhi Maidanam, Ammapettai, Salem-636 003. Editor : Shri. K.S. Jeevamani Cell : 97891 65555